## அன்ஹாந்தம் அன்ஹாதி

அன்ஹாந்தமென்பது:—ஒரு தினத்தில் அபரான்ன காலத்தினுடைய அந்தியம்; அன்ஹாந்தமாம். அன்ஹாதி யென்பது அபரான்னகாலத்தினுடைய ஆரம்பமாம். ஒருதினத்தின் அகஸை 5-னால் வகுத்து வந்ததை 3-னாற் பெருக்கி வருகிற நாழிகை; அன்ஹாதி; 4-னால் பெருக்க அன்ஹாந்தம். அன்ஹாந்தத்தைக் குறித்த தினத்திலும் அன்ஹாதியை மறுதினத்திலு மெழுதவேண்டும். இந்த அன்ஹாதி அன்ஹாந்தத்தை, அபரான்னத்தில் முடிகிற திதிகளுக்கு மட்டும் சோதிக்கவேண்டியது.

---

## நிர்ணய வசனங்கள்

1. திதி நிர்ணயஞ்செய்வதில் ஸவுரமானப்பிரகாரம், திதி சூன்னியமாகவும் சாந்திரமானப் பிரகாரம் அசூன்னியமாகவு மிருந்தால் பூர்வமாசத்திலுள்ள திதியை கிராஹியம் செய்யவேண்டும். (வை. ஹாரீத வசனம்.)

2. சவுரமானப்பிரகாரம் திதி சூன்னியமாய்விட்டால் பூர்வத் திதியை கிரஹிக்கவேண்டும் அது ஸபலமென்றும்; பின் வருகிற திதியை அனுஷ்டித்தால் அது அஸுரருக்குப் பிரீதியாகுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (பாராசர வசனம்.)

3. கார்த்திகை, மார்கழி, தை இம்மாஸங்களிற் திதி வாமயிலே யிருந்தால் பூர்வ மாஸத்திலுள்ள திதியை கிராஹியம் செய்யவேண்டும். (ஸ்மிருதி.)

4. முன் மாஸத்தின் திதி குதபகாலத்திலிராமல் ஸங்கிராந்திக்குப் பின்வந்தால் பூர்வமாசத்தின் திதியை அனுஷ்டிக்காமல் அடுத்த மாஸத்தில் வருகிற திதியில் குதபகாலத்தைப் பிரமாணித்து அனுஷ்டிக்கவேண்டும். (ஸ்மிருதி.)

5. பகற்காலத்தின் 8-வது பாதத்தில் குதபகாலத்தை கிரஹிக்க வேண்டும். (ஸ்மிருதி.)

6. பகலை 15 பாகமாகச் செய்யப் பட்டிருக்கிறது. அவை யாவன:—1 ரவுத்திரம் 2 சைத்திரம் 3 மைத்திரம் 4 சாலகடம் 5 ஸாவித்திரி 6 ஐயந்தம் 7 காந்தர்வம் 8 குதபம் 9 ரோகிணி 10 விரிஞ்சம் 11 விஜயம் 12 நைருதி 13 மகேந்திரம் 14 வருணம் 15 போதம். (வைத்யம்.)

---

## அமாவாசியின் நிர்ணயம்

சதுர்த்தசி யன்று 4-வது ஜாமத்தில் அமாவாசியின் சம்மந்தங் கொஞ்சமிருந்தாலும் அன்று போதாயன அமாவாசியை இதுமேல் க்ஷயமாக இருக்கவேண்டும். பிரதமையன்று அஸ்தமன வேளையிற் துதிகையின் சம்மதம் வந்தால் சதுர்த்தசி யென்று போதாயன அமாவாசியை (போதாயன வசனம்.) மற்ற அமாவாசிக்கு திதி நிர்ணயம் பார்க்க.

## மஹாளய நிர்ணயம்

1. மாளய பக்ஷம்:—பாத்திரபத பகுளப் பிரதமை முதல் மறு பிரதமைவரை 16 தினங்கள் இதற்குப் பக்ஷமாளயமென்று பெயர் இதை அனுஷ்டிக்கச் சாத்தியப்படாவிட்டால் சகிற் மாளய புண்ணிய தினங்களில் நடத்தலாம்.

2 அவையாவன:—மகா பரணி; வியதீபாதம்; மத்தியாஷ்டமி; (இவைகளில் சுக்கிரவாரம், ரேவதி, ஜென்ம நட்சத்திரம், ஜென்ம நட்சத்திரத் திரயம்வந்தாற் கூடாது.) சந்நியஸ்த மாளயம்—மேற்படி துவாதசி (சந்நியாசிகளுக்கு; கெதஜாய மாளயம்—மேற்படி திரயோதசி (விதவைகள்மட்டும் அனுஷ்டிக்கத் தக்கது;) சஸ்திரஹத மாளயம்—மேற்படி சதுர்த்தசி (துர்மரணம் நேரிட்டவர்களுக்காக.)

## திஸ்ரேஷ்டகா நிர்ணயம்

மார்க்கசிரம், புஷ்யம், மாகம், பால்குணம், இந்த 4 மாதங்களிலும் அபரசப்தமி, அஸ்டமி, நவமி, இந்த திதிகள் வீதம் 12 திதிகளும் திஸ்ரேஸ்டகா தினங்கள். இவற்றை பஞ்சாங்கத்தில், சப்தமிக்கு நேராக எழுதப்படுகிறது.

## ஷண்ணவதி சிரார்த்தம்

ஸங்கிராந்தி 12 அமாவாஸ்யை 12 மனு 14 யுகம் 4 வைதிருதி 12 வியதீபாதம் 12 மகாளயம் 16 அஷ்டகா 1 அன்வஷ்டகை 1 திஸ்ரோஸ்டகை 12 ஆகமொத்தம் 96.

## உபாகர்ம நிர்ணயம்

1 யஜுர் உபாகர்மம்:—இதற்குச் சிராவண சுத்த பௌரணமி பிரதானம். இந்தப் பௌரணமி 12-நாழிகைக்குமேல் யிருக்க வேண்டும்.

2. ருக்கு உபாகர்மம்:—(அல்லது ஆசுவலாயன உபாகர்மம்.) இதற்குச் சிரவணமாசத்திய திருவோணம் பிரதானம். இது உதய காலத்தில் 3-நாழிகையிருக்கவேண்டும் இவ்விரண்டு உபாகர்மங்களும் ஒரே தினத்திலும் ஸம்பவிக்கவுங்கூடும்.

3. ஸாமோபாகர்மம்:—பாத்திரபத சுத்த அஸ்தம் பிரதானம் இது உதயத்தில் 6 நாழிகையிருக்கவேண்டும்.

குறிப்பு:—இந்த உபாகர்மங்களில் ருக்கு வேதத்திற்கு வியாழனுக்கும் யஜுர் வேதத்திற்குச் சுக்கிரனுக்கும், ஸாமவேதத்திற்குச் செவ்வாய்க்கும் அதர்வணவேதத்திற்குப் புதனுக்கும் அஸ்தமனம் தோஷமென்றும் அந்தந்த சாகாதீசனுக்குத் தோஷமில்லாவிடின் அந்தந்த உபாகர்மத்துக்குத் தோஷம்பார்க்கவில்லையென்றும்விதி. ஆனால், இவ்விதி பிரதம உபாகர்மத்துக்கு மட்டும் அனுஷ்டிக்கத்தக்கது. இப்படி அஸ்தமனம் ஸம்பவித்த காலங்களில் அதற்கு அடுத்த மாசத்தில் உபாகர்மம் அனுஷ்டிக்கவேண்டும், புரோஸ்டபதத்தில் உபாகர்மம் நடக்கிரவிஷயத்தில் மந்த பவும வாரங்கள் ஆகாது. மற்ற வாரங்களுக்குத் தோஷமில்லை. மொத்தத்தில் இத்தியாதி தோஷங்களாகிய அதிமாஸ மலமாஸ—அஹஸ்பதிமாஸ—குரு, சுக்கிர, குஜ, புதாஸ்தமயங்களும் பிரதமோபாகர்மத்துக்குங்கூட வறுஜிக்கவேண்டாமென்றும், இத்தோஷங்களை விந்தியபர்வதத்திற்கு வடக்கே அனுஷ்டிக்கவேண்டுமென்றும் விதி.

---

## காயத்திரி ஜெபம்

சிராவண கிருஷ்ணப் பிரதமை பிரதானம், பௌரணமி புச்சத்தையும் பிரதமை பூச்சியத்தையும் சேர்த்து பாதியாக்குவதில் 15-நாழிகைக்கு முன்வந்தால் முதல்நாள். அதாவது, உபாகர்மதினத்திலும் பின்வந்தால், மருதினதிலும் அனுஷ்டிக்கத்தக்கது. இரண்டு தினத்திலும் 12 நாழிகைக்குமேவிருந்தால் புச்சதினம் பிரதானம்.

---

## ஏகாதசி நிர்ணயம்

1. ஸ்மார்த்த ஏகாதசி:—சூரியாஸ்தமம் ஒரு முகூர்த்தம் (2½-நாழிகை) எந்தத் தினத்தில் ஏகாதசியிருக்குமோ அந்தத் தினம் துவாதசிக்குப் புச்சம்பிரதானம். அதாவது, துவாதசி சூரிய உதயாத்பரம். ஒரு கலாமாத்திரமாவ திருக்கவேண்டும். துவாதசிக்குப் புச்சமில்லாத விஷயத்தில், ஏகாதசி புச்சத்தில் துவாதசியும் பூர்ண ஏகாதசி தினத்தில் ஏகாதசிவிரதமும் அனுஷ்டிக்கத்தக்கது இதுவே அதிவிருத்த ஏகாதசி.

---

10

## வைணவ ஏகாதசி

2. வைணவ ஏகாதசி:—இதற்கு தசமியின் வேதைகூடாது. வேதையாவது ஏகாதசியன்று சூரிய உதையத்திற்குமுன் 4-நாழிகைக்குள் தசமிமுடிந்தால் அதாவது முந்தியதினத்தில் தசமி 56-நாழிகைக்கு மேல் ஒரு விநாடியிருந்தாலும் அது வேதைதான்.

3. மத்வ ஏகாதசி:—இதற்குத் தசமி வேதையை சூரிய உதையாத் பூர்வம் ஒருஜாமம் அதாவது 7½-நாழிகை வர்ஜிக்கத்தக்கது

4. ஸர்வத்திர ஏகாதசி:—ஸ்மார்த்தபக்ஷம் வைணவபக்ஷ மிரண்டும் ஒரு தினத்தில் வருவது.

---

## கிருத்திகாதீப நிர்யணம்

1. வைகாநஸ தீபம்:—கார்த்திகைமீ பவுாணமி பிரதானம். தீபாரோகணகாலத்தில் அதாவது பிரதோஷகாலத்தில் பவுரணமாயிருக்கவேண்டும்.

2. சிவதீபம் வைகாநஸதீபப்படிக்கு.

3. பாஞ்சராத்திரதீபம்:—கார்த்திகை மாசத்திற் கார்த்திகை பிரதானம். தீபாரோகண காலத்திற் கார்த்திகையிருக்கவேண்டும். இதற்குப் பரணி வேதைகூடாது, சூரிய உதயாத்பரம் பரணி ஒரு விநாடியிருந்தாலும் வேதைதான். இப்படி ஸம்பவித்தால் மறுதினத்தில் தீபாரோஹணம் அன்று ரோகஹிணியாகவே யிருக்கும். இதினாலே கிருத்திகை புச்சமே பிரதானம்

---

## ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நிர்ணயம்

1. கோகிலாஷ்டமி:—சிராவண பகுள அஷ்டமீ பிரதானம் இதை கிருஷ்ணாஷ்டமி யென்றும், ஸ்மார்த் கிருஷ்ணாஷ்டமியென்றும் சொல்வார்கள். இந்த அஷ்டமி அர்த்தராத்திரி வியாபினியாயிருக்க வேணும்.

2. ஜெயந்தி:—சிராவண பகுள அஷ்டமியும், ரோகணியும், ஹரிஸன நாமயோகமும், ரிஷப லக்கினமும் சேர்ந்தால் ஜெயந்தியாகும்.

3. பாஞ்சராத்திர ஜெயந்தி:—ரோகணிக்காவது அஷ்டமிக்காவது வேதையில்லாமல் சுத்தமா யிருந்தால் அன்று கிராகியம். ஆனால் அஷ்டமி புச்சமும், ரோகணி புச்சமும் சூரிய உதையாத்பரம் இரண்டு நாழிகை யிருந்தால் அன்றுதான் கிராகியம். இதை ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி யென்றும், ஸ்ரீ வைஷ்ணவ ஜெயந்தி யென்றுஞ் சொல்லப்படும்.

---

## பிரதோஷ நிர்ணயம்

பிரதோஷம்:—பகல் 26½-நாழிகைக்குமேல் 32½-நாழிகைவரைக்கும் திரியோதசி யிருக்கவேண்டும்; இது சந்தேகமில்லாதது. இதில் சதுர்த்தசி வியாபித்தால் கிருஷ்ண பக்ஷத்தில் திரயோதசித் தினத்திலும், சுக்கிலபட்சத்தில் துவாதசித்தினத்திலும் பிரதோஷ விரதம் அநுஷ்டிக்க வேண்டும்.

## சிவராத்திரி நிர்ணயம்

1. மகா சிவராத்திரி:—பகுள சதுர்த்தசி இது இராத்திரி 15-நாழிகை யிருக்க வேண்டும்.

மஹா சிவராத்திரி:—இது மாக, மாஸ சிவராத்திரி.

## தீபாவளி நிர்ணயம்

தீபாவளி:—அற்பசியீ கிருஷ்ண சதுர்த்தசி இராத்திரி 4-வது ஜாமத்தி லிருக்கவேண்டியது.

---

## வ்ரத காலங்கள்

1. சைத்திர சுத்தப் பிரதமை சித்தி கணபதி விரதம், சப்தமி கங்கோற்பத்தி, அஷ்டமி பவான் யுற்பத்தி, நவமி ஸ்ரீராம நவமி, தசமி, தர்மராஜ தசமி, துவாதசி, வாமனத் துவாதசி, தமன துவாதசி, திரயோதசி, தமனத் திரயோதசிகளாம்.

2. வைசாக சுத்தத் திரிதிகை, அக்ஷயத் திரிதிகை துவாதசி, பரசுராம துவாதசி, பௌரணமி, அர்த்தநா ரீசுவர விரதமாம்.

3. ஜேஷ்ட சுத்தத் திரிகை, சுவர்ண கௌரி விரதம், தசமி தசஹார விரதம், பௌரணமி வடசாவித்திரி விரதமாம்.

4. ஆஷாட சுத்த சஷ்டி, குமார சஷ்டி, ஏகாதசி, சயன ஏகாதசி, சாதுர்மாத விரதாரம்பம். பௌரணமி வியாசபூசை.

5. சிராவண சுத்த சதுர்த்தி, நாக சதுர்த்தி, தூர்வா கணபதி விரதம், பஞ்சமி, கருட பஞ்சமி, நாக பஞ்சமி, ஏகாதசி, பரிவர்த்தனை ஏகாதசி, பௌரணமி வரலக்ஷிமி விரதம், (இவ்விரதம் பௌரணமியிலாவது பௌரணமி அடுத்த முன் வெள்ளியிலாவது அநுஷ்டிக்கத் தக்கது) பகுளச் சதுர்த்தி, சங்கட சதுர்த்தி, சப்தமி சீதாள விரதம், அஷ்டமி தசபல விரதமாம்.

6. பாத்திரபத சுத்தச் சதுர்த்தி, சித்தி கணபதி விரதம் (இத்திதியே பிள்ளையார் சதுர்த்தியாம்) பஞ்சமி, ரிஷி பஞ்சமி, சஷ்டி, சம்பா சஷ்டி, சப்தமி, முக்தாபரண சப்தமி, அஷ்டமி, தூர்வா அஷ்டமி, (ஜேஷ்ட விரதம்) நவமி, அதுக்க நவமி, தசமி, கெஜலக்ஷிமி விரதம், ஏகாதசி, பரிவர்த்தனை ஏகாதசி, துவாதசி, பரிவர்த்தனை துவாதசி, பௌரணமி அனந்த விரதம், உமாமஹேசுவர விரதம், பகுள அஷ்டமி, மத்தியாஷ்டமி, சதுர்த்தசி கேதார விரதமாம்.

7. ஆஸ்வியுஜ சுக்க அஷ்டமி, துர்க்காஷ்டமி (மஹாஷ்டமி) நவமி, மஹா நவமி சரஸ்வதி பூஜை, தசமி, விஜய தசமி, பௌர்ணமி, கௌமுதி ஜாகர விரதம், பகுளச் சதுர்த்தி, நாக சதுர்த்தி, அஷ்டமி, அசோகாஷ்டமி, சதுர்த்தசி, நரகா சதுர்த்தசி. (இத்திதி ராத்திரி 4-வது ஜாமம் நரகாசுர சம்ஹாரம்; இதனை தீபாவளி யென்பர்.)

8. கார்த்திக சுத்தத் துதிகை, யமத் துதிகை, சதுர்த்தி நாக சதுர்த்தி, ஷஷ்டி, கந்தர் சஷ்டி, நவமி, அக்ஷய நவமி, ஏகாதசி, பிரபோதன ஏகாதசி, உத்தான ஏகாதசி, துவாதசி சாதுர்மாஸ விரத பூர்த்தியாம்.

9. மார்க்கசிரசுக்த சஷ்டி, சம்பா சஷ்டி, ஏகாதசி, வைகுண்ட ஏகாதசி, திரயோதசி, அனங்கத் திரயோதசி, பகுள அஷ்டமி, கால பைரவாஷ்டமிகளாம்.

10. மாக சுத்த பஞ்சமி, வசந்த பஞ்சமி ரத சப்தமி, ஏகாதசி, பீஷ்ம ஏகாதசி, துவாதசி, பீஷ்ம துவாதசி, பகுள சதுர்த்தி மகா சிவராத்திரியாம்.

## * மாத விசேடங்கள்

சித்திரைமாதஞ் சித்திரை, சித்திரகுப்த பூசை; மார்கழிமாதம் திருவாதிரை, ஆருத்ரா தெரிசனம்; தைமாதம் பூசம், புஷ்யஸ்நானம்; ஆடிமாதப் பிறப்பு சரவ நதீரஜஸ்ஜவலை; ஆடிமாதக் கடைசித் தினம், ஆடி அருதி; தைமாதம் 2உ மாட்டுப் பொங்கல்; பங்குனி மாதப் பிறப்பு; சம்பத் கௌரி விரதங்களாம்.

## விசேட பண்டிகைகள்

சைத்திரசுத்தப் பிரதமை, யுகாதிப்பண்டிகை, ஆஸ்வீயுஜ பகுள சதுர்த்தசி தீபாவளிப் பண்டிகை, பால் குணசுக்த பௌர்ணமி, ஹோளி காமபண்டிகை தைமாதப்பிறப்பு, பொங்கல்பண்டிகைகளாம்.

## சௌரமான மாதங்கள்

சூரியன் இருக்கப்பட்ட இராசிகளினுடைய உபரிநாமங்களே சௌரமானமாதப் பெயர்களாம். ஆகாயத்தைப் பனிரெண்டு பாகஞ் செய்து அப்பாகங்களுக்கு மேடாதி மீனவரை பெயர்கள் அமைத்து அப்பாகம் ஒவ்வொன்றிலுஞ் சூரியன், வருகிற நாழிகை விநாடிகளே மாதப் பிறப்பென்றும் ஒவ்வொரு பாகங்களிலும் நிற்குஞ் சமாரான (30) தினத்தை மாதமென்றும் சொல்லப்படுகிறது.

இராசிகளினுடைய வித்தியாசத்துக்குத் தக்கதாய் மாதங்களும் (30) தினத்திற்கு சொற்ப நாள்கள் ஏறியுங் குறைந்தும் வருகிறதுண்டு.

ஏறிய நாள்களுடைய மாதங்கள் (32) தினத்திற்குமேல் வராது. குறைந்த நாள்களுடைய மாதங்கள் (28) தினத்திற்கு குறைந்து வராது.

இப்படி வருஷமும் ருதுக்களுஞ் சௌரமானமாகும். (12) மாதங்களி னுடைய நாள்கள் (365) நாழிகை (15) விநாடி (31) அப்படியே 15-ம் ஒரு சம்வத்சரத்தினுடைய அளவாக இருக்கின்றது "சௌர மானமென்பது சூரியனால் வருகின்ற மாதங்களாம்."

நமது தேசவாசிகளாயுள்ள பல பெரியோர்கள் சைவ ஆசாரங்களில் வரும் காலாகாலங்களை சௌரமான ரீதியாயும் அனுஷ்டித்து வருகிறார்கள். பின்னுங் காட்டிய சௌரமான ஜாப்தாவில் மாதங்கள் அறியவேண்டும்.

மலையாளதேச முழுமையும் 12-ராசியின் பெயர்களே மாதப் பெயர்களாக வழங்குகிறார்கள்.

அனுஷ்டானமுஞ் சௌரமான ரீதியாகவே இருக்கிறது.

## சாந்திரமான மாதங்கள்

சந்திரன் எந்தெந்தப் பௌரணமிகளில் அடியிற் காட்டிய பனி ரெண்டு நட்சத்திரங்களுடன் கூடுகிறானோ அந்தந்த நட்சத்திரங்களி னுடைய பிரிதி நாமங்களை சந்திரமானமாதப் பெயர்களாம்.

சுக்கில பக்ஷமுங் கிருஷ்ண பக்ஷமுங் கூடிச் சாநதிர மாதம் பூர்த்தியாகிறது.

சுக்கிலபக்ஷம் பிரதமை முதல் கிருஷ்ண பக்ஷம் அமாவாசி முடி வதற்குள் ளுண்டாகும்.

எந்தப்பௌரணமியைச் சித்திரை நட்சத்திரம் சமீபிக்கின்றதோ அந்தப் பௌரணமியை (சைத்திரமாதமென்றும்) விசாக நட்சத்தி ரஞ் சமீபிக்கிற பௌரணமியை(வைசாக மாதமென்றும் இம்மாதிரியே சமீபிக்கின்ற பௌரணமிகளுக்கு கேட்டைவரில் ஜேஷ்டமாத மென்றும் பூராடத்திற்கு அஷாடமாதமென்றும் திருவோணத்திற்கு சிராவண மாதமென்றும் பூரட்டாதிக்கு பாத்திரபத மாதமென்றும் அசுபதிக்கு ஆஸ்வீயுஜ மாதமென்றும் கார்த்திகைக்கு கார்த்தீக மாத மென்றும் மிருகசீரிடத்திற்கு மார்க்கசிர மாதமென்றும் பூசத்துக்கு புஷ்யமாதமென்றும் மகத்துக்கு மாகமாதமென்றும் பூரத்துக்குப் பால்குண மாதமென்றும் பெயர்களாம்.

எந்தப் பௌரணமிகளுக்கும் முன்னுற்சென்ற, பிரதமை முத லான திதிகளை அப்பௌரணமிகளின் சாந்திரமான மாதச்சுத்த மென்றும் அப்பௌரணமிகளுக்குப் பின்வருகிற பிரதமை முதலான திதிகளே அப்பௌரணமிகளின் சாந்திரமான பகுளமென்றும் அறியவேண்டும்.

சுக்கிலபக்ஷப் பிரதமை நேர்சுத்தமென்றும் கிருஷ்ணபக்ஷ பிர தமை நேர் பகுளமென்றுங் குறிக்கவேண்டும்.

குறிப்பு.—எதாகிலுமொரு சௌரமான மாதமுடிவதற்குள் இரண்டு அமாவாசிகள் வந்தால் முதல் அமாவாசி முடியும்வரை சாந்

திரமாத ஜாப்தாவின்படி சாந்திரமான மாதமாகிறது. பின் அமாவாசி அடுத்த சாந்திரமான மாதமாக விருந்தாலும் அம்மாதமாகக் கொள்ளாது. அதன் அசி மாதமென்றும் அந்த அமாவாசிக்குப் பின் அடுத்த சௌரமானத்தில் வரும் அமாவாசியுடன் முடிகிற மாதம் அம்மாதத்தின் நிஜமாதமென்றுங் கொள்ளவேண்டியது.

உதாரணம்.—சித்திரை மீ 1௨ ஒரு அமாவாசியும், 30௨ ஒரு அமாவாசியும் நேரிட்டால் 2௨ முதல் 30௨ வரையுள்ள வைசாக மாதத்திற்கு வைசாக அதிமாதமென்றும் அடுத்த அமாவாசிக்குப் பின் (நிஜ) வைசாகமென்றும் விவரமாய் எழுதவேண்டும்.

சாந்திரமான மாதமுடிவிற்கு, அமாசாவென்றும் மத்யத்திற்கு மதியம் என்றுதான் இப்பெயர் வந்திருக்கவேண்டும்.

இச்சாந்திரமான சம்பந்தமாகவே, ஆய, விசைய, சுந்தாய, கல்ப்பாதி, மனுவாதி, விரதாதி காலங்களைப் பூர்வ நூலாசிரியர்கள் அனுஷ்டித்து வந்ததாக (விரத கலப்பம்) சூடாமணி, முதலான பல சாஸ்திரங்களினால் தெரிய வருகிறது.

ஆகையினால் சாந்திரமான மாதங்களினுடைய விவரங்களை இவ்விடங் காட்டலாயிற்று.

### சாந்திரமானமென்பது-சந்திரனால் ஏற்படுகிற மாதங்களாம் ஜாப்தாக்கள்

| சௌரமான மாத ஜாப்தா. | | | சாந்திரமான மாத ஜாப்தா. | | |
|---|---|---|---|---|---|
| எண்கள். | சூரியன் நிற்கிற இராசிகள். | உபரி நாம மாதங்கள். | எண்கள். | பௌர்ணமிகளுக்கு முக்கியமாய்ச் சமீபிக்கின்ற 12-நட்சத்திரங்கள். | சாந்திரமான மாதங்கள். |
| 1 | மேடம் | சித்திரை | 1 | சித்திரை | சைத்திரம் |
| 2 | இடபம் | வைகாசி | 2 | விசாகம் | வைசாகம் |
| 3 | மிதுனம் | ஆனி | 3 | கேட்டை | ஜேஷ்டம் |
| 4 | கடகம் | ஆடி | 4 | பூராடம் | ஆஷாடம் |
| 5 | சிம்மம் | ஆவணி | 5 | திருவோணம் | சிராவணம் |
| 6 | கன்னி | புரட்டாசி | 6 | பூரட்டாதி | பாத்திரபதம் |
| 7 | துலாம் | ஐப்பசி | 7 | அசுபதி | ஆச்வியுஜம் |
| 8 | விருச்சிகம் | கார்த்திகை | 8 | கார்த்திகை | கார்த்திகம் |
| 9 | தனுசு | மார்கழி | 9 | மிருகசீரிடம் | மார்க்கசிரம் |
| 10 | மகரம் | தை | 10 | பூசம் | புஷ்பம் |
| 11 | கும்பம் | மாசி | 11 | மகம் | மாகம் |
| 12 | மீனம் | பங்குனி | 12 | பூரம் | பால்குனம் |

# முக்கியகவனிப்பு

சாலியவாகன சகாப்தம்:—கலியுக சகாப்தத்தில் 3179-கழிக்கச் சாலியவாகன சகாப்தம் வரும். சாலியவாகனன் என்ற ஒரு அரசன் நரசிங்க நகரத்தில் அரசாட்சி ஆரம்பத்திற்கு முன் கலியிற்சென்ற வருடம் 3179. அவன் அரசாட்சி தொடங்கி 349-வருடத்தில் கணிதம் ஏற்படுத்தினார்கள். அதன்பின் இப்போது சென்ற அக்ஷயாவோடு 24 பரி விருத்திகள் முடிந்து. 25-வது பரி விருத்தியில் சில வருடங்கள் சென்று கொண்டிருக்கிறது. ஆகையினுற்தான் வருட வட்டமாகிய 60-க்கும் 24-க்கு பெருக்கி 349 கூட்டி பிரபவாதியாகச் சென்ற வருடங்களை கூட்டுகிறது. முன் சொல்லிய அக்ஷயாவரை நடந்த வருடங்களில் எவ்வருடங்களுக்காகிலும் கணிதஞ்செய்யவேண்டுமானால், 23-ல் பெருக்கி முன் முறைபோற்கூட்டவும்.

நிகழும் 25-வது பரிவிருத்தியில் வரும் அக்ஷயாவிற்குப் பின் வரும் வருடங்களுக்குக் கணிதம் செய்யவேண்டுமானால் 25-ல் பெருக்கி முன்முறைபோற் செய்துகொள்ளவும்.

குறிப்பு:—கலிசுத்ததினங் காணுஞ்செய்யுளில் 24-ல் பெருக்கி என்றிருக்கிறதை சென்ற பரிவிருத்திகளுக்குத் தகுந்தவண்ணம் மாற்றிக் கொள்ளவேண்டியது.

கலியுக சகாப்தம்:—சாலியவாகன சகாப்தத்தில் 3179 கூட்டக் கலியுக சகாப்தம் வரும். அதாவது, சாலியவாகனன் அரசாட்சி ஆரம்பத்துக்கு முன் கலியிற் சென்றவருடம் 3179. ஆகையினுற் தான் இத்தொகையைக் கூட்டுகிறது.

கலியுகசகாப்தம் வேறுவழி:—83-க்கும் 60-க்கும் பெருக்கி எவ்வருடங்களுக்குக் கணிதஞ்செய்யவேண்டுமோ அவ்வருடத்திற்குப் பிரமாதி முதற் சென்றவருடங்களை எண்ணிக்கூட்டக் கலியுகசகாப்தம் வரும்.

விவரம்:—நிகழும் பிரபவாதியான வட்டத்தில்வந்த பிரமாதிக்கு முன் கலியிற்சென்ற பரிவிருத்திகள் 83-ஆனபடியினால் 83-ல் பெருக்கிப் பிரமாதி முதற் சென்ற வருடங்களை எண்ணிக்கூட்டுகிறது. கிருஷ்ணபகவான் காலாந்தங் கலிபிறப்பாகிறது.

விக்கிரமார்க்க சகாப்தம்:—கலிசகாப்தத்தில் 3045-வருடங் கழிக்க விக்கிரமார்க்க சகாப்தம் வரும்.

விவரம்:—விக்கிரமார்க்கன் என்ற ஒரு அரசன் உச்சயினி புரத்தில் அரசாரம்பத்துக்கு முன் கலியிற்சென்ற வருடங்கள்

3041, இந்தை வடதேசவாசிகள் 6-வருட வித்தியாசமாகவும் அனுஷ்டிக்கிறார்கள்.

**போஜராஜ சகாப்தம்:**—கலிசகாப்தத்தில் 3141-கழிக்கப் போஜராஜ சகாப்தம் வரும். அதாவது. போஜன் காலத்தை வட தேசவாசிகள் பலவழியாக அனுஷ்டிக்கிறார்கள்.

**கொல்லாப்தம்:**—கலிசகாப்தத்தில் 3926-வருடங்கழிக்க கொல்ல வருடம்.

**விவரம்:**—கொல்லாப்தம்ஏற்படுத்துவதற்கு முன் கலியிற் சென்ற வருடங்கள் 3926-கொல்லவருடத்தைப் பரசுராமாப்தம் என்றுஞ் சொல்லுவார்கள். தமிழ்நாட்டில் ஆவணிமாதமுதலும் வட மலையாளத்தில் புரட்டாசி மாதமுதலுங் கொல்ல வருடப்பிறப்பாகக் கொள்ளுகிறார்கள்.

**இங்கிலீஷ் வருடங்கள்:**—கலியுக சகாப்தத்தில் 3101 வருடங்கழிக்க இங்கிலீஷ் வருடம் வரும். இவ்வருடத்தை மேல் நாட்டார் கலிபிறந்த 3101-ல் மார்கழிமாதம் 12உ வியாழக்கிழமையி லிருந்து ஜனவரிமீ 1உ முதல் கணக்கிட்டிருக்கிறார்கள். பிரதி வருடமும் மார்கழிமீ 18உ அல்லது 19உ முதல் இங்கிலீஷ் வருடப் பிறப்பாரம்பம். இது முழுமையும் சௌரமான ரீதியே.

**பசலி வருடங்கள்:**—கலியுக சகாப்தத்தில் 3693 வருடங் கழிக்கப் பசலி வருடங்கள் வரும்.

ஆங்கிலேய இராஜாங்கத்தாரால் ஜூலைமீ 1உ முதல் பசலி ஆரம்பமாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். இது அக்பர் காலத்தில் ரெவினியுகாரியங்களுக்காக கலிசகாப்தம் 3691 வருடத்தில் ஆனிமீ 18உயிலிருந்து ஜூலைமீ 1உ முதற் கணக்கிட்டிருக்கிறார்கள்.

**ஹிஜரி வருடங்கள்:**—கலியுகசகாப்தத்தில் 3823-வருடங் கழிக்க ஹிஜரிவருடம் வரும்.

இதுவே மஹமதியர்கள் அனுஷ்டிக்கிற வருடங்களாம். அதாவது, மஹமது மெக்காவிலிருந்து மெடியினாவிற்குப் போனகாலம். கலியிற்சென்ற 3723 வருடம் ஆடிமீ 1உயிலிருந்து மொகராமீ 1உ முதற் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆரம்பம் கி. பி. 622 ஜூலைமீ 16உ வெள்ளிக்கிழமை

**பரிவிருத்தி காண:**—மாதக்கோளான சூரியன் (21600) கலையைச் சுற்றிவருங் காலம். ஒரு வருடம் என்றும், வருடக்கோளான வியாழன் (21600) பாகையைச் சுற்றிவருங் காலம் ஒரு பரிவிருத்தி யென்றுங் கணக்கிட்டிருக்கிறார்கள். அல்லாமல் வருடக் கோள்களான குரு, சனி இருவரும் ஒரு ராசியிற் சேர்ந்து பிரிந்து

மீதமில்லாது சுற்றி முன்போற் கூடுகிற காலத்தைப் பரிவிருத்தி யென்றுஞ் சொல்லுவார்கள்.

**விவரம்:**—அளவிலாது நடந்துவருகிற வருடங்களை எண்ணச் சுலபமா யிருக்கும்பொருட்டே (60) வருடங்களுக்கு ஒரு பரிவிருத்தி யென்றும் வருட வட்டமென்றும் பெயர் அமைத்தார்கள்.

**வருடங்கள்:**—ஒரு பரிவிருத்திக்குள் நடக்கிற அனேக பாகத்தைக் குறுக்கி அறியும்பொருட்டே சரியான பாகம் 60-ஆக்கி ஒவ்வொரு பாகத்திற்கும் ஒரு வருடமாகக் கணக்கிட்டு ஒவ்வொரு வருடத்திற்கும் அடியிற் காட்டியபடி பெயர் அமைத்திருக்கிறார்கள்.

## ஜாப்தா

| எண். | வருடங்கள் | எண். | வருடங்கள். | எண். | வருடங்கள். | எண். | வருடங்கள். |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | பிரபவ | 16 | சித்திரபானு | 31 | ஹேவிளம்பி | 46 | பரிதாபி |
| 2 | விபவ | 17 | சுபானு | 32 | விளம்பி | 47 | பிரமாதீசுா |
| 3 | சுக்கில | 18 | தாரண | 33 | விகாரி | 48 | ஆனந்த |
| 4 | பிரமோதூத | 19 | பார்த்திப | 34 | சார்வரி | 49 | இராக்ஷத |
| 5 | பிரஜோத்பத்தி | 20 | விய | 35 | பிலவ | 50 | நள |
| 6 | ஆங்கீரச | 21 | சர்வசித்து | 36 | சுபகிருது | 51 | பிங்கள |
| 7 | ஸ்ரீமுக | 22 | சர்வதாரி | 37 | சோபகிருது | 52 | காளயுக்தி |
| 8 | பவ | 23 | விரோதி | 38 | குரோதி | 53 | சித்தாத்திரி |
| 9 | யுவ | 24 | விக்குரிதி | 39 | விசுவாவசு | 54 | ரௌத்திரி |
| 10 | தாது | 25 | கர | 40 | பராபவ | 55 | துர்மதி |
| 11 | ஈஸ்வர | 26 | நந்தன | 41 | பிலவங்க | 56 | துந்துபி |
| 12 | வெகுதானிய | 27 | விஜய | 42 | கீலக | 57 | ருத்ரோத்காரி |
| 13 | பிரமாதி | 28 | ஜெய | 43 | சௌமிய | 58 | ரக்தாக்ஷி |
| 14 | விக்கிரம | 29 | மன்மத | 44 | சாதாரண | 59 | குரோதன |
| 15 | விஷு | 30 | துன்முகி | 45 | விரோதிகிருத் | 60 | அக்ஷயா |

**அயனங்கள்:**—ஒரு வருடத்திற்குள் நடக்கிற சரிபாதி காலம் ஒரு அயனமாகிறது. அதாவது, சூரியன் பூமத்திய ரேகைக்கு உத்தரபாரிசத்தி லிருக்கும்போது உத்திராயண மென்றும், தக்ஷிண பாரிசத்தில் வரும்போது தக்ஷிணாயனமென்று பெயர். சூரியன் மகர முதல் மிதுனவரையிலுள்ள 6-ராசிகளில் சஞ்சரிக்கிற மாதமாகிய தை மாத முதல் ஆனி மாத வரையிலுள்ள 6-மாதமும் உத்தராயண காலமென்பார்.

கடகமுதல் தனுசுவரையிலுள்ள 6-ராசிகளில் சூரியன் சஞ்சரிக்கிற மாதமாகிய ஆடிமாதமுதல் மார்கழிமாத வரையிலுள்ள 6-மாதமும் தக்ஷிணாயண காலமென்று பெயராகிறது.

குறிப்பு:—சூரிய உதையம் அல்லது அஸ்தமய நேரங்களில் அடிவானத்தில் ஏதாவதொரு தூரமான அடையாளத்தைப் பார்த்துக்கொண்டு வருவதினால், இவ்வயன வித்தியாச மறியலாம்.

சமமான ஒரு வட்டத்தின் மத்தியில் வளைவில்லாத கம்பியை நிறுத்தி அந்நிழலின் நுனி உள்வாங்குவதும் வெளியிற் போவதினாலும் அயனம் ஆரம்பகாலந் தெரியலாம்.

இருதுகள்:—சூரியன் பூமியினுடைய கீழ்த்திசையில் தென்பாரிசத்தில் சில காலமும் வடபாரிசத்தில் சிலகாலமும் மத்தியரேகைக்கு நேராகச் சிலகாலமுமாக விருப்பதால் சூரியகிரணம் பூமியின்மேல் ஒரே அளவாக விழாமல் பேதமாக விழுவதினால் கிரணத்தின் தன்மையை அனுசரித்து சீதோஷ்ண ஸ்திதிகள் வேறுபடுகின்றன. அப்படிப் பேதப்படுந் தன்மைகளை அனுசரித்து ஆறு வகுப்புகளாகப் பிரித்து ஒவ்வொரு வகுப்புகளுக்கும் இருதுகளென்று பெயரிட்டிருக்கிறார்கள். இவைகளின் விவரங்களை அடியிற்காட்டிய ஜாப்தாவினால் அறியலாம்.

ஜாப்தா

| என். | மாதங்கள். | காலங்கள். | இருதுக்கள். |
|---|---|---|---|
| 1 | சித்திரை<br>வைகாசி | இளவேனில் | வசந்தருது |
| 2 | ஆனி<br>ஆடி | முதுவேனில் | கிரீஷ்மருது |
| 3 | ஆவணி<br>புரட்டாசி | கார்காலம் | வருஷ்ருது |
| 4 | ஐப்பசி<br>கார்த்திகை | கூதிர்காலம் | சரருது |
| 5 | மார்கழி<br>தை | முன்பனி | ஹேமந்தருது |
| 6 | மாசி<br>பங்குனி | பின்பனி | சசிருது |

மாதங்கள் :—ஒரு வருட காலத்தை இராசிகளுக்குத் தக்க படி அளவுபடுத்திய 12-பாகத்தின் ஒவ்வொரு பாகமே மாதமாகிறது. இம்மாதமானது சௌரமான மாதமென்றுஞ் சாந்திர மாதமென்றும் இங்கிலீஷ் மாதமென்றும், மகமதிய மாதமென்றும் இப்படி பலவித மாதங்கள் இருக்கிறது. சௌரமான மாதஞ் சாந்திரமான மாதமாகிய இவ்விரண்டு மாதவிவரங்களையும் முன் திதிநிரணயாதிகளிற் சொல்லி இருக்கிறது.

இங்கிலீஷ் மாதங்கள் :—இங்கிலீஷ் வருடத்தை 4-ல் வகுக்க மீதமில்லாதிருந்தால் அதற்கு லீப்பு வருடமென்று பெயர். அந்த வருடத்தில் மாத்திரம் பிப்ரவரி மாதத்தில் 29-தினங்களும் மீதம் வருடம் வருடத்தின் பிப்ரவரி மாதம் 28-தினங்களாக வரும். ஜனவரி, மார்ச்சி, மே, ஜூலை, ஆகஸ்டு, அக்டோபர், டிசம்பர் இந்த 7-மாதம் 31-தினங்களுள்ளது.

ஏப்ரல், ஜூன், செப்டம்பர், நவம்பர் இந்த 4-மாதம் 30-தினங்களுள்ளது.

லீப்பு வருடம் வந்த பிப்ரவரி 29-தினமும் வராத பிப்ரவரி 28-தினமுமாக வருகிறது.

மகமதிய மாதங்கள்:—பூர்வபக்ஷத்து திருதிகையன்று மாதம் பிறக்கும்; எந்த தினத்தில் மாதம் பிறக்கிறதோ அந்தத் தினத்தில் இராத்திரியில் திருதிகை யிருக்கவேணும். இதை வைத்துத் தேதி கணக்கிட இவ்வருடமும் மாதமும் சாத்தியமான ரீதியாக உபயோகிக்க வேண்டும்.

அடியிற் காட்டிய வகைகளில் மாதங்களை அறிந்து கொள்ள வேண்டியது.

மகம்மதிய மாதங்கள் - 12. அவையாவன:—1 - மொகரம், 2-ஸபர், 3-ரப்பிலவ்வல், 4-ரப்பிசானி, 5-ஜுமாதிஹவல், 6-ஜுமாதிசானி, 7-ரஜப், 8-ஷாபான், 9-ரம்சான், 10-ஷவ்வால், 11-ஜில்காது, 12-ஜில்ஹேதது.

இங்கிலீஷ் மாதங்கள்-12. அவையாவன:—1-ஜனவரி, 2-பிப்ரவரி, 3 மார்ச்சி, 4 ஏப்ரல், 5-மே, 6-ஜூன், 7-ஜூலை, 8-ஆகஸ்டு, 9-செப்டம்பர், 10-அக்டோபர், 11-நவம்பர், 12-டிசம்பர் இம்மாதிரியாக பெயர் வருகின்றது.

பக்ஷங்கள் :—ஒவ்வொரு மாதத்திலும் அமாவாசியை அடுத்துவரும் பிரதமை முதல் 15-திதிகளை சுக்கிலபக்ஷ மென்றும் பூர்வ பக்ஷ மென்றும் பிரதமை முதல் 15-திதிகளை கிருஷ்ணபக்ஷ மென்றும் அமரபக்ஷ மென்றுந் தேய்பிறையென்றும் பெயராகிறது.

தினங்கள்:—பூமியைச் சூரியன் சுற்றி வரும்போது சூரியனுக்கு எதிற்படுகிற பூமியின் பாகம் வெளிச்சமாகவும், பூமியில் வாசஞ்செய்கிற ஜனங்களுக்கு இப்பாகம் பகலாகவும், சூரியப் பிரகாசம் படாத பாகம் இருட்டாகவும் இப்பாகத்தில் வசிக்கும் ஜனங்களுக்கு இராக்காலமாகவும், கிரமமாக வந்துக்கொண்டிருக்கிற இந்த இராப்பகல் இரண்டுங்கூடின மொத்தம் ஒரு தினமாக நிச்சயத்திருக்கிறார்கள். ஒரு தினமானது சுமார் 60-நாழிகை அல்லது 24-மணி நேரமாகிறது.

பூமியானது துருவ சூத்திரமென்ற அச்சில் புரளுகிறபோது சூரியனுக்கு எதிற்படுகிற பாகம் பகலாகவும் மற்றபாகம் இரவாகவும் சொல்லப்படுகிறது. ஆ. க. சி. பூமியானது சமமாக விராததினால் முன் சொல்லிய நாழிகையின் பாதிக்கு சொற்பபாகம் ஏற்றக்குறைவுள்ளதாக பகலும் இரவும் வரும். அதின் விவரங்களை அகசு கணிதத்தில் காட்டியிருக்கிறேன்.

மகமதியர் தினங்கள்:—ஒரு சாயங்கால முதல் மறு சாயங்கால வரையிலும் அதாவது, சவுரமான கிழமைபன்று சாயங்காலம் அவர்களுக்கு அடுத்த கிழமை ஆரம்பம்.

ஐரோப்பியர் தினங்கள்:—முதல் நாள் ராத்திரி 12-மணி முதல் மறுதினம் இராத்திரி 12-மணி வரை ஒரு தினமாகக்கொண்டிருக்கிறார்கள். அதுவும் மேலேகண்டபடி ஆரம்பம்.

சாந்திரமான தினங்கள்:—திதியே தினமாகும் அது எப்பொழுதும் 60-நாழிகை சரியாக விருக்கமாட்டாது. சொற்பங் கூடியுங் குறைந்தும் வரும். சூரியனை விட்டுச் சந்திரன் 12-பாகைத்தூரம் விலகி வருங்காலமே திதியின் பிரமாணமாகிறது.

கிழமைகள்:—பூமிக்குமேல் சந்திராதி கிரக கோளங்கள் பிரவாக வாயுப்பேரித பசக்கரபிரமாண வேகத்தோடு கூடினதுகளாகி பூர்வாபி முகமாக கக்ஷாந்தரங்களிற் சஞ்சரித்துக்கொண்டு பிரதிக்ஷணமும், பூமிப்பிரதக்ஷிணஞ் செய்கின்றன. அதுகளுக்கு கீழாக பிரத்தியக்ஷ சித்தமாகிய பூமியானது மஹா நதி, பர்வத, சமுத்திர, தேச, நாமிருகாதிகளால் வசிக்கப்பட்டதாக பிரமாவின் தாரணைசக்தியை யடைந்து ஆகாயத்தில் பிரவர்த்திக்கின்றது. நோக பூமிக்குமேல் சந்திரன், அதன்மேல் புதன், அதன்மேல் சுக்கிரன், அதன்மேல் சூரியன், அதன்மேல் செவ்வாய், அதன்மேல் வியாழன், அதன்மேல் நீலன், இந்தக் கிரகங்களுக்கு மேலாக நக்ஷத்திர கோளத்தின் கீழ் சனி, அதன் கீழ் வியாழன், அதன் கீழ் செவ்வாய் அதன் கீழ் சூரியன், அதன் கீழ் சுக்கிரன், அதன் கீழ் புதன், அதன் கீழ் சந்திரன், அதன் கீழ் பூமியானது ஆகாய மத்தியிலிருக்கின்ற இவ்வேழு கிரகங்களுப். தினம் !-க்கு ஒஜனுதமகசுதியினுல் சமானர்களயிருந்தாலும்

(கோளங்களுடைய அளவு பேதங்களினால் அதிக காலத்தில் சிலரும் குறைந்த காலத்தில் சிலரும் பூர்வாபிமுகமாக பசக்கரத்தைச் சுற்றி வருகிறார்கள் எல்லாக் கோளங்களுக்கும் மேலான சனியின் கீழ் குரு குஜ அர்க்க சுக்கிர சௌம்ய சந்திரன் முதலானவர்கள் கிரமத்தினால் காலஹோராதிபர் ஆகின்றார்கள். ஹோரையென்றால் 2½-நாழிகை யென்று பொருள். எல்லாவற்றிற்கும் மேலாயிருக்கின்ற சனி முதலான ஏழு கிரகங்களினுடைய பாதுதலியுண்டாகிற மூன்று சுற்றுகளுக்கும் 21-ஹோரைகள் உண்டாகின்றன. அதுகளினால் ஒரு கிழமையினுடைய நாழிகை பூர்த்தியாகின்றதில்லை. ஆகையால் சனி, குரு, செவ்வாய் முறையாய்ச் சுற்றுகிறார்கள். இவர்களின் மூன்றோரைகளினால் 7½-நாழிகைகள் ஆகின்றன. முன்வந்த 21 ஹோரைக்கும் 52½-நாழிகை யுஞ் சேர்க்க 60-நாழிகை பூர்த்தியான நாள் 1-க்கு 24-ஓரைகள் ஆகின்றன. இந்தக் காலஹோரா பரிவர்த்தன அல்லது மாறுதலின் பொருத்தினால் மீந்த ஹோராதிபனாகிய சூரியன் எல்லாவற்றிற்கும் மேலாயிருக்கின்ற சனியவன் நான்காவது பாகத்திலிருப்பதினால் முதலாவது வாராதிபன் சூரியன், இவன் கீழ் நான்காவது பாகத்திற் சந்திரனிருப்பதினால் 2-வது வாராதிபன் சந்திரன் இவனுக்கு 4-வது பாகத்தில் செவ்வாய் இருப்பதினால் 3-வது வாராதிபன் செவ்வாய், இவனுக்கு 4-வது பாகத்தில் புதன் இருப்பதினால் 4-வது வாராதிபன் புதன் இவனுக்கு 4-வது பாகததில் குரு இருப்பதினால் 5-வது வாராதிபன் வியாழன், இவனுக்கு 4-வது பாகத்தில் சுக்கிரனிருப்பதினால் 6-வது வாராதிபன் சுக்கிரன், இவனுக்கு 4-வது பாகத்தில் சனி இருப்பதினால் 7-வது வாராதிபன் சனி யென்றும் இம்மாதிரியாக 7-கிழமைகளும் கிரமமாக பெயர்பெற் றிருக்கின்றன.

1-ஞாயர், 2-திங்கள், 3-செவ்வாய், 4-புதன், 5-வியாழன், 6-வெள்ளி, 7-சனி.

**திதிகள்:**—சூரியனிலிருந்து சந்திரன் 12 பாகமட்டும் விலகுங் காலமானது திதியாகிறது. அத் திதியானது பூர்வதிதி 15 அபரதிதி 15 சூரியனிருக்கிற ராசியிலிருந்து சந்திரனிருக்கிற ராசியானது 6-ராசிக்குள்ளானால் பூர்வபக்ஷமென்றும் 6-ராசிக்குமேலானால் அமரபக்ஷமென்றுஞ் சொல்லப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1-பிரதமை | 5-பஞ்சமி | 9-நவமி | 13-திரயோதசி |
| 2-துதிகை | 6-சஷ்டி | 10-தசமி | 14-சதுர்த்தசி |
| 3-திரிதிகை | 7-சப்தமி | 11-ஏகாதசி | 15-பௌர்ணமி |
| 4-சதுர்த்தி | 8-அஷ்டமி | 12-துவாதசி | 16-அல்லது அமாவாசி |

நட்சத்திரங்கள்:— இராசிமண்டலத்தை 27 பாகஞ்செய்த ஒவ்வொரு பாகத்திலுஞ் சந்திரன் நடக்கிற 13-பாகை 20 கலையுள்ள தூரத்தை நட்சத்திரமென்று சொல்லவேண்டும். பூராடத்தில் 4-ம் பாதமும் திருவோணத்தின் முதற்பாதமும் அபிஜித்து.

| | | |
|---|---|---|
| 1-அசுபதி | 10-மகம் | 19-மூலம் |
| 2-பரணி | 11-பூரம் | 20-பூராடம் |
| 3-கிருத்திகை | 12-உத்திரம் | 21-உத்திராடம் |
| 4-ரோகணி | 13-அஸ்தம் | 22-திருவோணம் |
| 5-மிருகசீரிஷம் | 14-சித்திரை | 23-அவிட்டம் |
| 6-திருவாதிரை | 15-சுவாதி | 24-சதயம் |
| 7-புனர்பூசம் | 16-விசாகம் | 25-பூரட்டாதி |
| 8-பூசம் | 17-அனுஷம் | 26-உத்திரட்டாதி |
| 9-ஆயில்யம் | 18-கேட்டை | 27-ரேவதி |

யோகங்கள்:—சூரிய சந்திரர்கள் சம்சர்க்கத்தின் ஒவ்வொரு பாகத்தினுடைய 13-பாகை 20-கலையின் தூரமான காலம் செல்லுகிறது யோகமென்னப்படும்.

| | | |
|---|---|---|
| 1-விஷக்கம்பம் | 10-கண்டம் | 19-பரிகம் |
| 2-பிரீதி | 11-விருத்தி | 20-சிவம் |
| 3-ஆயுஷ்மான் | 12-துருவம் | 21-சித்தம் |
| 4-சவுபாக்கியம் | 13-வியாகாதம் | 22-சாத்தியம் |
| 5-சோடனம் | 14-அரிஷணம் | 23-சுபம் |
| 6-அதிகண்டம் | 15-வச்சிரம் | 24-சுப்பிரம் |
| 7-சுகர்மம் | 16-சித்தி | 25-பிராமம் |
| 8-திருதி | 17-விதிபாதம் | 26-ஐந்திரம் |
| 9-சூலம் | 18-வரியான் | 27-வைதிருதி |

கரணங்கள்:—ஒவ்வொரு திதியிலும் வரும் சரிபாதி காலத்தை கரணமென்று சொல்ல வேண்டும்.

| | | |
|---|---|---|
| 1-பவம் (சிங்கம்) | 5-கரசை (யானை) | 9-சதுஷ்பாதம் (நாய்) |
| 2-பாலவம் (புலி) | 6-வணசை (எருது) | 10-நாகவம் (பாம்பு) |
| 3-கவுலவம் (பன்றி) | 7-பத்திரை (கோழி) | 11-கிமுஸ்துக்கினம் (புழு) |
| 4-தைதுலை (கழுதை) | 8-சகுனி (காகம்) | |

அகசு அல்லது பகல்:—ஒவ்வொரு நாளும் பகலும் இரவும் 30-நாழிகை சரியாகவராமல் ஏற்றக்குறைவாக வருகிறது. இதின் காரணம் பூமியானது சூரியனுக்கு நேராகயிராமல் கொஞ்சப்பாகம் ஒருக்கணித்திருப்பதால் அதின்பேரில் சூரியப்பிரகாசம் எப்போதும் ஒரளவாய் படாமல் சித்திரைமாதமுதல் புரட்டாசிமாதம்வரை அதின் வடபாதியின் மேலதிகம் படுகிறதினாலும் மற்ற தென்பாதியின்மேல் அற்பசி மாதமுதல் பங்குனி மாதம்வரையும் படுகிறதினால் பூமியின்

வடபாகத்திலிருக்கிற ஜனங்களுக்கு சரிவின்பேதத்திற்கு தக்கபடி சித்திரைமாத முதற் புரட்டாசி மாதம்வரையில் பகல் அதிகமாகிறது. இரவு குறைகிறது. அர்ப்பிசி மாதமுதற் பங்குனி மாதம் வரை பகல் குறைகிறது. இரவு அதிகமாகிறது சித்திரைமாதமும் அர்ப்பிசிமாதமும் பகல் இரவு நாழிகைகள் சற்றேறக்குறையச் சரியாக விருக்கிறது.

குறிப்பு:—கணிதரீதியாய் பங்குனிமாதம் 12 தேதியிலிருந்தும் புரட்டாசிமாதம் 12 தேதியிலிருந்தும் அக்ஷப் பிரமாணப்படிய 30 நாழிகைகள் ஏற்றக்குறைவாக ஆரம்பிக்கிறது.

அயனாம்சம்:—யுகாரம்பங்தொடங்கி நட்சத்திர மண்டலமானது கிரமமாக 27 பாகைகள் மேற்காகச் சென்று பின்னும் பழைய ஸ்தானத்தை அடைந்து கிழக்காக 27 பாகைகள் சென்று மறுபடியும் பூர்வ ஸ்தானத்தைச் சேருகிறகாலமானது ஒருமண்டலம் இப்படி ஒரு மகாயுகத்தில் (600) மண்டலங்கள் செல்லுகிறது.

சூரிய அயனம்:—முன்னமே இவ்வயனத்தை ஒவ்வொரு மாதமும் 8 தேதி முதல் 11 தேதிவரையுஞ் சூரியபுடஞ் செய்ய வேண்டுமென்று சொல்லியிருந்தபோதிலும் அயனபுடம் 19 பாகை முதல் 22 பாகைவரையான 3 பாகை வித்தியாசத்தை (200) வருடத்திற்கு கணக்காய்ச்சொல்லியிருக்கிறார்கள். எப்போதும் அயனபுடத்தில் எந்தத் தேதியினுடைய சூரியபுடப் பாகை மீதமில்லாது சேருமோ அந்தத்தேதியில் முன்சொல்லிய பிரகாரம் சூரிய அயனம் பிறக்கிறது.

யுகங்கள்:—உத்தம தேகிகளினுடைய ஒருதின சுவாசமாகிய (21600) ஐ சதுரவகையான முழுச்சதுரக்கூறுகிய 80-ல் பெருக்க கிரேதாயுகம் 1728000 வருடமாகிறது. முக்கால்ச் சதுரக்கூறுகிய 60-ல் பெருக்க திரேதாயுகம் (1296000) வருடமாகிறது. அரைச் சதுரக் கூறுகிய 40-ல் பெருக்க துவாபரயுகம் (864000) வருடமாகிறது. கால்ச்சதுரக்கூறுகிய 20-ல் பெருக்க கலியுகம் (432000) வருடமாகிறது. யுகங்களினுடைய வித்தியாசத்துக்குத் தக்கதாய் மனிதர்களின் தர்மமும் ஆயுளுங் குறைவாகிறதென்று மனுமுதலான தர்ம சாஸ்திரங்கள் கூறுகிறது.

இந்த நாலுயுகமுங்கூடி (4320000) வருடமானகாலம் ஒரு மகாயுகமென்றும் பெயர் பெருகின்றது.

மனு முதலான கற்ப காலங்கள்:—71 மகாயுகத்தில் 14 இந்திரர்கள் பட்டம்பெற்றால் அதில் ஒரு மனுவினுடைய காலம் நடக்கிறது. இப்படி 14 மனுக்கள் நடக்கிரகாலமானது ஒரு கற்ப காலமாம், அல்லது பிர்மாவுக்கு ஒரு தினமாகிறது. கற்பத்தில் (36000) சென்றால் பிர்மாவினுடைய பரமாயுளாகிறது. (1000) பிர்ம

வினுடைய காலம் விஷ்ணுவினுடைய ஒரு நாழிகை. (1000) விஷ்ணு காலம் சிவநிமிஷம் (1000) சிவநிமிஷம் மகாமாயைக்கு ஒரு நிமிஷ காலம் ஆகிறது. இப்படி அளவில்லாத மகாமாயையில் நடந்த செல்லும் காலத்தை பூர்வ நூல்ரீதி குறிக்கிப்பார்த்தால் அடியிற் காட்டிய ஜாப்தாவின்படி ஆகிறது.

| | | | |
|---|---|---|---|
| 6 பிராணம் | 1 விநாடி | 6 சக்கிரம் | 1 தேவவருடம், |
| 60 விநாடி | 1 நாழிகை, | 1200 தேவவருடம், | 1 கலியுகம், |
| 60 நாழிகை | 1 நாள், | 2400 ,, | 1 துவாபரயுகம், |
| 7 நாள் | 1 வாரம், | 3600 ,, | 1 திரேதாயுகம், |
| 15 நாள் | 1 பக்ஷம், | 4800 ,, | 1 கிரேதாயுகம், |
| 2 பக்ஷம் | 1 மாதம், | 100 ,, | 1 கலிசந்தி, |
| 2 மாதம | 1 ருது, | 200 ,, | 1 துவாபரசந்தி, |
| 3 ருது | 1 அயனம், | 300 ,, | 1 திரேதாயுகசந்தி, |
| 2 அயனம் | 1 வருடம், | 400 ,, | 1 கிரேதாயுகசந்தி, |
| 60 வருடங்கள் | 1 சக்கிரம் | 360 மனுடவருடம் | 1 தேவவருடமாம். |

இக்கலியுகத்தில் 6 சககருத்தாக்களுடைய காலம் நடக்குமாம். அதாவது, முதல் யுதிஷ்டிரன் சகாப்தம் 3044 விக்கிரமன் சகாப்தம் 135 சாலிபவாகன சகாப்தம் (18000) விஜயாபிநந்தன் சகாப்தம் (10000) நாகார்ஜுனன் சகாப்தம் 400000. கலிவருடம் 821 இந்த வண்ணம் 6 சககருத்தாக்கள் கலியுகம் பூர்த்தியாய் முடிகிறது.

---

## சிருஷ்டியாதி கதாப்தம்

இதுவரை சென்ற 6 மநுக்களின் காலத்தையும் அவர்கள் அதிகார மேற்றகாலத்தில் நேரிட்ட மத்தியகாலம் 6 சந்திகளினுடைய காலத்தையும் நிகழும் கற்பத்தின் ஆரம்பத்திற்கும் முதலாவது மனுவந்தரத்திற்கும் மத்தியகாலச் சந்தியையும் நடக்கிற 7-வது மனுவாகியவை வசுதமனு வந்தரத்திற்சென்ற 27 சதுர்யுகங்களினுடைய காலத்தையும் கூட்டிவந்த மொத்தத்தில் பிர்மா பிரபஞ்ச சிருஷ்டிக்கி மத்தியிற்சென்ற தேவவருடங்களை சௌரமான வருடங்களாகக் கணக்கிட்டுக் கழிக்கவந்தமீதத்தில் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் இம்மூன்று யுகங்களின் வருடத்தையும் தற்காலவரையும் கலியுகத்தில் சென்ற வருடங்களையும் முன்வந்த வருடங்களுடன் கூட்ட சிருஷ்டியாதி சென்ற வருடங்களாகிறது.

---

### உதாரணம்

கலியுக சகாப்தத்தில் சென்ற 4974-வது வருடமாகிய ஸ்ரீமுகாவிற்கு:—சென்ற 6 மனுவிற்கு 426 மகாயுகங்கள் இதில் இதுவரை சென்ற 27 மகாயுகங்களைக்கூட்ட 453 இதை

உ

குமரன் றுணை

# கணிதமுருக சேகரம்

## இரண்டாவது அங்கம்

### கிரகங்களின் மூலத்துருவங்கள்

பரிதிமுதலாச இக்கணிதத்தில் மருவுமோன்
 பதின்மர் மூலத்துருவமும்
பகருவாம் ராசியொடு பாகைகலைவி கலையாய்ப்
 பன்னுநான் வெண்களிரவி
பதினொன்று சொல்லு மிருபத்தெட்டு மருவுநாற்
 பதின்மூன்று பதினாறுமாம்
பனிமதி யிராசியொரு நான்காறு பாகைகலை
 பத்தொன்ப தொன்றுவிகலை
மருவியுறு துங்கற்கு மூன்றே யிராசியாம்
 வருபாகை யொன்பதுகலை
வந்தபதின் மூன்றாகும் விகலையைம் பத்தெட்டு
 மன்னுமங் காரகற்கு
வாய்த்திடு மிராசியைந் தொன்பதே பாகைகலை
 வானமுறும் உடுவின்எண்ணும்
மற்றவொன் றில்லைமதி மகனுக் கிராசியேழ்
 வண்மையுறு பாகையைந்து
பெரியகலை விகலையிலை பொன்னனுக் கொன்றே
 பிறங்கிடும் இராசிபாகைப்
பேச்சிலைக் கலையுடுத் தொகையாகும் விகலையின்
 பேச்சுமிலை சுக்கிரற்குப்
பேணுமொன் றோராசி பாகையிரு பத்தைந்து
 பெட்பினுறு கலைமுப்பது
பின்புவரு விகலையோ ராருஞ் சனிக்குவரு
 பெருராசி யைந்துபாகை
அரியவொன் பதுகலையு மாகுமிரு பத்தெட்
 டடுத்தமொன் றில்லையாகும்
அவிர்சுடர் களைத்தெறு மிராகுக்கு ராசிபா
 யண்ணுவது நான்குபாகை

ஒரு மகாயுகவருடம் 4320000-ல் பெருக்க 1956960000 வருடம் ஒரு மனுவினிட சந்திவருடம் 1728000 இப்படி 6 மனுசந்தி சென்றவருடம் 10368000 இதில் கற்பசந்தி 1-க்கு 1728000-வருடங் கூட்ட 12096000-வருடம். இந்த 7 சந்தியின் தொகையை முன் தொகையிற் கூட்ட 1969 56000 வருடம். இதில் பிர்மா பிரபஞ்ச சிருஷ்டி மத்தியிற்சென்ற 17064000-வருடங் கழிக்க 1951992000-வருடம். இதில் இதுவரையும் சென்ற கிருத, திரேத, துவாபர மூன்றுயுகங்களின் வருடத்தையுஞ் சேர்க்க, 1955880000-இதில் நிகழும் கலியுக சகாப்தத்தில் ஸ்ரீமுக வருடத்திற்கு சென்ற 4974-வருடங்கூட்ட சிருஷ்டியாதியாகச்சென்ற 1955884974-வருடங்களாகிறது. அல்லது, 1955880000 இதில் கலியுகசகாப்தத்தில் சென்றவருடத்தை கூட்டினாலும் சிருஷ்டியாகச் சென்றவருடங்கள் வரும்.

சிருஷ்டியாதி சுத்ததினங்கள் காணும்வழி:—சிருஷ்டியாதி சென்றவருடங்களை 12-ல் பெருக்கச் சௌரமாதங்களாம் இதில் சாந்திரமான ரீதியாய் சைத்திரசுத்தமுதலாகச் சென்ற மாதங்களைக்கூட்டி இரண்டு பிரிவாகவைத்து முதல் பிரிவைசதுராயுக அதிமாதங்களாற் பெருக்கி சதுரயுகச் சூரியமாதங்களால் வருத்துவந்த ஈவை இரண்டாவது பிரிவிற் கூட்டி இதை 30-ல் பெருக்கி சுக்கில பக்ஷப் பிரதமைமுதல் தெரிய வேண்டிய தேதிவரைக்குஞ் சென்ற திதிகளைக் கூட்டி இதை இரண்டு பிரிவாக வைத்து முதற்பிரிவை சதுரயுகத் திதி க்ஷயங்களால் பெருக்கி சதுரயுகச் சாந்திரதினங்களால் வருத்துவந்த ஈவை இரண்டாவது பிரிவிற் கழிக்க சிருஷ்டியாதி சுத்ததினங்கள் சரியாகவரும்.

குறிப்பு:—சதுரயுக அதிமாதங்கள் 159336. சதுர்யுகச் சூரிய மாதங்கள் 51840000. சதுரயுகத் திதி க்ஷயம் 25082252. சதுரயுகச் சாந்திர தினங்கள் 1603000080.

---

## உதாரணம்

## ஸ்ரீமுகவ௵ பங்குனிமீ 28வக்கு சிருஷ்டியாதி சுத்ததினம் அறிய

ஷை வருடம் பங்குனிமீ 7வ வரையும் சிருஷ்டியாதியாகச் சென்ற வருடம் 1955884975. இதை 12-ல் பெருக்க 23470619700 சௌர மானமாதங்களாம். இதில் சைத்திரசுத்த முதல்மாதஞ் செல்லாததால் மாதங்கூட்டவில்லை. முன்வந்த சௌரமான மாதங்களை இரண்டு பிரிவாக வைத்த முதற்பிரிவாகிய 23470619700-ஐ ஒரு சதுரயுகத்தின் அதிமாதங்களாகிய 159336-ல் பெருக்க 3739658331031 9200 இதைஒரு சதுரயுகச்சௌரமானமாதங்களாகிய 51840000-ல் வருத்து வந்த ஈவு 721384708 ஆகிய தொகை சிருஷ்டி

யாதியாகச் சென்ற அதி மாதங்களாம். இத்தொகையை முன் சௌர மானமாதம் இரண்டாவது பிரிவிற் கூட்ட சாந்திரமான மாதங்களாகிய 24192004408. இதை 30-ல் பெருக்கிவருகிற 725760132240 சாந்திரமான தினங்கள். இதில் சுக்கிலபக்ஷப் பிரதமைமுதல் 28-ந் தேதிவரையுஞ் சென்ற திதிகள் 21 கூட்ட 725760132261 சிருஷ்டியாதி சாந்திரமான தினமாம். இதை இரண்டு பிரிவாகவைத்து முதற் பிரிவாகிய725760132261ஐ சதுரயுகத்திதி க்ஷயங்களாகிய25082252-ல் பெருக்க 18203698528923731772 இதை ஒரு சதுரயுகத்தின் சாந்திரமான தினங்களாகிய 1608000080-ல் வகுத்துவந்த ஈவாகிய 11356018478 சிருஷ்டியாதி திதி க்ஷயதினங்களாம். இதை முன் வைத்த சிருஷ்யாதி சாந்திரமான தினமாகிய 725760132261 இரண்டாவதுபிரிவிற் கழிக்கவந்த 714404113788 சிருஷ்டியாதியாகச்சென்ற சுத்த தினங்களாம். அல்லது 714402296626 தினத்தில் கலியுக சுத்ததினத்தை கூட்டினாலும் சிருஷ்டியாதி சுத்ததினங்கள் வந்துவிடும்.

# கற்பாதிமனுக்கள் ஜாப்தாக்கள்.

| எண். | கற்பங்கள் 30. | எண். | கற்பங்கள். | எண். | மனுக்கள் 14. |
|---|---|---|---|---|---|
| 1 | வாமதேவம் | 16 | நாரசிம்மம் | 1 | சுவாயம்பு |
| 2 | சுவேதவராகம் | 17 | சமானம் | 2 | சுவாரோசிஷ்டன் |
| 3 | நீலலோகிதம் | 18 | ஆக்கினேயம் | 3 | உத்தமன் |
| 4 | ரந்தரம் | 19 | சோமம் | 4 | தாமசன் |
| 5 | ரௌரவம் | 20 | மானவம் | 5 | ரைவதன் |
| 6 | தேவகற்பம் | 21 | தத்புருஷம் | 6 | சாக்ஷுசன் |
| 7 | பிரகத்கிருஷ்ணம் | 22 | வைகுண்டம் | 7 | வைவசுதன் |
| 8 | கந்தர்ப்பம் | 23 | லக்ஷ்மி | 8 | சாவர்ணி |
| 9 | சத்தியம் | 24 | சாவித்திரி | 9 | தக்ஷசாவர்ணி |
| 10 | ஈசானம் | 25 | கோரம் | 10 | பிர்மசாவர்ணி |
| 11 | தமம் | 26 | வராகம் | 11 | தர்மசாவர்ணி |
| 12 | சாரஸ்வதம் | 27 | வைராஜம் | 12 | ருத்திரசாவர்ணி |
| 13 | உதானம் | 28 | கௌரி | 13 | தேவசாவர்ணி |
| 14 | காருடம் | 29 | மகேஸ்வரம் | 14 | இந்திரசாவர்ணி |
| 15 | கௌரமம் | 30 | பிதிரு | | |

பஞ்சாங்க கணிதபாகம் சம்பூரணம்.

இனி வரும் ஐந்து அங்கங்களும் இரண்டாம் பாகத்தில் காணலாம்.

யாயபதி னொன்றுகலை பதின்மூன்று விகலையா
யறைவதோ ரொன்பதாகும்
அருமையாங் கணிதமெனி தாயெவரு முணரச்சொ
லணிமுருக சேகரமிதே.

(1)

## ஜாப்தா

| நெ. | கிரகம். | இராசி. | பாகை. | கலை. | விகலை. | |
|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | 11 | 28 | 43 | 16 | |
| 2 | சந்திரன் | 4 | 6 | 19 | 1 | குறிப்பு. |
| 3 | செவ்வாய் | 5 | 9 | 27 | 0 | சந்திர கணி |
| 4 | புதன் | 7 | 5 | 0 | 0 | தத்தில் வருகிற |
| 5 | வியாழன் | 1 | 0 | 27 | 0 | துங்கனுக்கு "மூ |
| 6 | சுக்கிரன் | 1 | 25 | 30 | 0 | லத் துருவம்" |
| 7 | சனி | 5 | 9 | 28 | 0 | இ. பா. க. வி. |
| 8 | இராகு | 4 | 11 | 13 | 9 | 3. 9. 13. 58. |
| 9 | கேது | கேதுவுக்கு மூலத்துருவ முதலியன கிடையாது. | | | | |

## கிரகங்களின் மந்தோச்சங்கள்

இரவிமுதலறுவர்க்கு மந்தோச்சமுங்குறித்
திடுவாம் ரவிக்குராசி
இரண்டுபதினெட்டு நற்பாகைபதினாறுகலை
யேற்ற அங்காரகற்கு
வருராசிநான்கேழுபாகை முப்பதின்மூன்று
மன்னுகலை புதனிராசி
மருவேழுபாகையேழாகு நாற்பதினேழு
வாய்த்தகலை குருவினுக்குத்
தருராசியைந்திருப தொடிரண்டுபாகைகலை
தானைந்து சுங்கனுக்குத்
தகுமிரண்டேராசி பாகையிருபத்தொன்று
சாற்றுகலை நாற்பதாகும்
தரியற்கிராசியெட்டா மிரண்டேபாகை
கலையொன்பதென் றுபுகல்வார்
கற்றவர்களித்திடச் சொற்றபுகழுற்றிடுங்
கவின்முருக சேகரமிதே.

(2)

## ஜாப்தா

| கெ. | கிரகநாமம். | இராசி. | பாகை. | கலை. | விகலை. |
| --- | --- | --- | --- | --- | --- |
| 1 | சூரியன் | 2 | 18 | 14 | ,, |
| 2 | செவ்வாய் | 4 | 7 | 33 | ,, |
| 3 | புதன் | 7 | 7 | 47 | ,, |
| 4 | வியாழன் | 5 | 22 | 5 | ,, |
| 5 | சுக்கிரன் | 2 | 21 | 40 | ,, |
| 6 | சனி | 8 | 2 | 9 | ,, |

## புஜாகோடி விவரங்கள்

சீர்பெற்ற மேடமுதலாறு மேடாதியாஞ்
செட்டிமுதலறு துலாதி
திகழ்மகரமுன்னுறு மகராதி களிர்முதற்
சேராறு கடகாதியாம்
வார்பெறுபுஜாகோடி கேள்மூன் றிராசியின்
வரையொன்று மில்லையாறுள்
வந்ததேலாறிற்கழிக்க மேலொன்பதுள்
வரினறை நீக்கிவிடுக
பேர்பெறுநவத்தின்மேற் பனிரண்டினுட்படிற்
பெருகுமீராறு வைத்துப்
பெயர்க்கவு மிராசிகளை நாற்கூறு செய்ததிற்
பேசவரு முதலு மூன்றும்
காற்பெற்ற புஜைமற்றை யிருபங்கு கோடியாம்
கவனத்தில் வைக்கமாத
கற்பவர்களுணரவதி திட்பவழிகாட்டுங்
கவின்முக சேகரமிதே (3)

(இ - பு) புஜாகோடி சோதனைசெய்யும் விதமாவது:—மேட முதல் 6-இராசி, மேடாதி "துலாம் முதல் 6-இராசி, துலாதி "மகர முதல் 6-இராசி, மகராதி" கடகமுதல் 6-இராசி கடகாதி" யென்னு மிவை யறிந்து கொண்டு புஜாகோடிக்கு 3-இராசிவரைக்கும் ஒன்றும் செய்வதில்லை. 6-க்குட்படின் 6-ல் கழிக்கவேண்டும் 6-க்குமேல் 9-க் குள்ளானல் 6-ஐக்கழிக்க வேண்டும் 9-க்குமேல் 12-க்குள்ளாகில் 12-வைத்துக் கழிக்கவும், செய்க. இராசிகள் 12-ஐயும் 4-கூறுகளைத் தால் 1-வது 3-வது பிரிவுகட்குப் "புஜை" யென்றும், 2-வது 4-வது பிரிவுகட்குக் "கோடி" யென்றும் பெயர்களாம், என்க.

சுறவமாதிகளுக்கு மகாராஜா ஏனிராது
தோன்றுதற்குக் கடகஜாப்
படருமின்னவையெலாஞ் சொற்றனந் தெரிகுவாய்
பந்திணை யெனத்துலங்கிப்
பரிமளசுகந்தந் திமிர்ந்து பூரித்துப்
பணைத்தெழுந் தழகுகொண்டு
பார்ப்பவர்க ளுள்ளமெல்லாங் கொள்ளை கொண்டொளிர்
பயோதர விநோதமானே
பாகமாங்கணிதமுறையெளி துணர்ந்திடுமாறு
பகர்முருக சேகரமிதே (4)

## ஜாசம்ஸ்க்காரக் கிரிகைசெய்யுமுறை

(இ - பு) மேடாதிகளைதல் துலாதி கூட்டல் என்றறிந்து புஜா கோடி செய்து பாக்கிநின்ற இராசி 1-க்கு ஜா 5-ஆகவும் 6-பாகைக்கு 1-ஜாவாகவும் ஜாவின் தொகைகண்டு வைத்து மீதி நின்ற பாகையை 60-ல் பெருக்கிக் கலையுடன் கூட்டிவைத்தது சுகம், கண்ட ஜாவின் தொகையைப் பிந்திய ஜாவின்தொகையில் கழிக்கவந்த மிச்சமாகிய இன்பத்தால் முன்வைத்த சுகத்தைப்பெருக்கி 360-க்கு அரித்த ஈவை கண்ட ஜாவில் கூட்டுக. அரிக்கப்போதாதாகில் நீக்கிவிடவும், கலை அர்த்தாதிகமாகில் ஒரு கலையாகச் சேர்த்துக்கொள்க. ஜாவென்பது கலை அதனை, இராசி பாகைகலையேரிட்டு மேடாதியானல் களைந்து துலாதியானல் கூட்டிவைக்கவும், கண்டஜாவின் கலைக்குப்பின் ஜாவின் கலை குறையுமானல் கண்டதில் பிந்தியதைக்களைந்து கண்ட இன்பத்தால் சுகத்தைப்பெருக்கி 360-க்கு அரித்த ஈவைக்கண்ட ஜாவில் களைந்து இராசி பாகைகலையேரிட்டு அசகோற்கண்டு புஜாக்கொள்க. சோதனையில் ஜாபலம் வராவிட்டால் முதல் ஜாவின் கலையைக்கொண்டு சுகத்தைப்பெருக்கி 360-ஆல் அரித்த ஈவை மேடாதிகளைந்து துலாதி கூட்டி வைக்கவும்.

மகராதிக்கு - மகராஜாவும், கடகாதிக்கு - கடகஜாவும் கொள்ள வேண்டியது.

(1) இ. பா. க.
2—21—19 கிரிகை செய்ய வேண்டிய முறை.

| | |
|---|---|
| இராசி 2-க்கு ஜா | 10+ |
| பாகை 18-க்கு ஜா | 3 |
| ஆக ஜா | 13 |

மீதி பாகை 3. கலை 19.
செவ்வாயின் கடக ஜாவில்

| | |
|---|---|
| கண்ட ஜா 13-க்கு கலை | 2154 |
| பிந்திய ஜா 14-க்கு கலை | 2059 |
| இன்பம் | 95 |

(2) மீதியைக் கலையாக்குவது

பா. க.
3 × 19
60
180+
19
199 சுகம்

உதாரணம்

2-24-9-மேடாதி } 2-21-25 மேடாதியில் மகாதி; 5-26-19 மேடாதியில் கடகாதி

7-15-21-துலாதி } 8-21-19 துலாதியில் கடகாதி; 11-10-21 துலாதியில் மகாதி

(1) 2-21-25 பு-கோ-சோ-இல்லை
0—0—0
(2) 5-26-19—ராசி-6-ணில்
3-41 பு-கோ-சோ
(3) 8-21-19 ராசி-6-ஐ
6—0—0
2-21-19 பு-கோ-சோ

(4) 12—0—0
11—10—21—12-ராசியில்
0—19—39 பு-கோ-சோ

## ஜாசமஸ்க்காரங்களின் கிரிகைசெய்புமுறை

திடமருவுகிரிகை செயவரைகு வந்தகாதி
தீர்த்து நிரையாதி கூட்டல்
தெரிக்துபுஜைசெய்தேச்ச ராசியொன்றிற் கைந்து
ஜியாவாறு பகைகயொருஜா
தேர்கமீதியைய றுபதிற் பெருக்கிக்கலைய
திற்சேர்த்தல் சுகமுன்புகாண்
ஜியாவினைப்பின்ஜாவி னீக்கலின்பமிதிற்
சேர்சுகத்தைப் பெருக்கித்
தடவுமுன் னூற்றறுபதிற் கரித்தீவுறில்
ஜியாவிலிணைகுறைகி னீக்கர்த்
தாதிகத்தொன்றுசேர் ஜியாவென்பதேகலைபி
தனைராசியாதிசெய்து
தகாரதிதள்ளிநிரை கூட்டிவைமுன்வந்த
ஜாக்குப்பினது குறையுமேல்
காரமுனதிற் பின்னதைக்களைந் தெய்தின்ப
சத்திற் சுகம்பெருக்கித்
தொடருமுன் னூற்றறுபதுக் கீந்தமுந்துஜாத்
தொகையினீக்கிப் புஜாக்கொள்
சோதனையிலே ஜாவாரதெனில் முந்துஜாத்
தொகைகொடுசுகம் பெருக்கிச்
சொல்லுமுன் னூற்றறுபதா லரித்தசமொளித்
துத்துவாதிகள் கூட்டவும்

(3) சுகம்—199×
இன்பம் 95
995
1791
360) 18905 (50
1800
905
720 2
அர்த்தாதிகம் 185—1-கலைகூட்டி
கண்டகலாந்தம் 53

---

(4) கண்டஜாவில்களைய
2154
கலாந்தம 53
(60) 2101 } 30
1800
(60) 300 } 5
1
ஜாபலம்
இ. பா. க.
1—5—1

கண்ட ஜாபின்ஜாவிற் கழிபடாததால் கண்ட ஜாவில் பின்ஜாவைக் கழிக்க வேண்டியது

---

ஜாபலம் வராமைக்கு உதாரணம்.
(1) இ. பா. க.
0—4×—5-ஐ வராதால்
60
240+
5
245 கலை
செவ்வாயின் முதல்மந்தஜா } 40-ஐ பெருக்கி
360) 9800 (27 ஜாபலம்
720
2600
2520
80
அர்த்தாதிகமின் மையால்நீசகம் }
இ. பா. க.
ஜாபலம் 0—0—27

(1)

பொதுவானகிரிகை
இ. பா. க.
2—20—15
இராசி—2—க்கு—ஜா 10
பாகை—18—க்கு—ஜா 3
ஆக ஜா 13
மீதி—பா—2+க—15—கலைசெய்ய
60
120+
15
சுகம் 135—கலை
செவ்வாயில் மகராதியானதால்
மகாஜா—13—க்கு—1738 கழிக்க
பிந்திஜா—14—க்கு—1851 இதில்
113 இன்பம்

(2)

சுகம் 135 ×
இன்பம் 113
360)15155(42 மீதி 35
கலாந்தம் 42
மீதி 35
அர்த்தாதிகமின் மையால்நீசகம

(3)

கண்டஜா 1738+
கலாந்தம 42
60) 1780 எரிட
பா. க.
29—40
ஜாபலம்
இ. பா. க.
0—29—40

---

# கிரககண்ட வரலாறு

இதமாய்க் கணித்த கலிசுத்ததினம் வைத்ததி
லிசைத்த வொருநாளை நீக்கி
யேற்றபதி னேழு லக்கத் தெண்பதோரா
யிரத்தையு மகற்றி நின்ற
விதமுறு தினத்துடன் றேவையுள நாழிகை
விநாடி சேர்த்திடல் கண்டமா
மேலொரு தினத்தினை யெடுப்பதெற் றுக்கெனில்
வேண்டும் வாரத்தின் முழுதுஞ்
சதமாயிருப் பதாஞ் சுத்ததின மிதினுழி
சார்த்தி னயல்வாரத் ததாய்த்
தந்துவிடு மாதலா லொன்றுநீக்கிக் கடிகை
தான்கொண்டு செய்வ துசிதம்
பலமுறுங் கண்ட மதை லுதயத்தி னுக்கேற்று
பண்பி னுலேழி லீந்து
பௌமன் முதலெண்ணியே ஜனனநா ளறிகுவாய்
பகர்முருக சேகர மிதே (5)

(இ - பு) கலிசுத்ததினம் வைத்து அதில் ஒரு தினத்தை நீக்கி மீதியில் 17,81,000 (பதினேழுலக்ஷத்து எண்பத்தோராயிர)த்தைக் கழித்து வேண்டிய நாழிகை விநாடி வைத்து கண்ட தொகை கண்டம், மேற்சொன்னபடி ஒருதினம் எடுப்பது ஏனென்றால்:—கலி சுத்ததினமானது வேண்டியவார முழுவதிலும் யிருப்பதால் அத்துடன் வேண்டிய நாழிகையைச் சேர்த்துக் கணித்தால் அந்த முன் தினத்தினது புடம்வந்துவிடும். ஆகையால், ஒன்று நீக்கி செய்வதில் குறித்த தினத்தின் புடமே வரும். இக்கணிதம் செவ்வாயுதயத்திற்கு யேற்படுத்தப்பட்டபடியால் கண்டத்தை ஏழில் வகுத்து மிச்சத்தை செவ்வாய் முதலெண்ணினுல் ஜனன வாரம் வரும். இதுவே எல்லாக் கிரககணிதத்துக்கும் கண்டம் என்றறிக.

## உ தா ர ண ம்

ஸ்ரீமுகவூ பங்குனிமீ 28உ 12-நாழிகைக்கு.

| | |
|---|---|
| சுத்ததினம் | — 1817156— |
| சென்றமுன தினம் | 1 |
| | 1817157— |
| எடுக்குந்தினம்— | 1781000 |
| | 36156+ |
| ஜனனநாழிகை. | —12. |
| "கண்டம்" | 36156—12. |

7 | 36156:
5765: 1.

சேடம்—1 - க்கு செவ்வா யுதய முதல் புதனுதயம் வரை சென்ற மீது 12 - நாழிகை யிருப்பதால் புதன்கிழமை 12 - நாழிகைக்கு உதாரணங் காட்டப்பட் டிருக்கிறது.

## சூரிய கணிதம்

பூமருவி ரவியைக் கணிக்கும்படிக் கிங்கு
புகலுவாங் கண்டமதனைப்
பொலியு மிருபிரிவாக்கி யொன்றைப் பனொன்றிற்
பொருந்தப் பெருக்கி யங்கு
புகலவா ரகமேழு சதமறுப துடனான்கு
பூரித் தரித்து வந்த
போந்துலவு பாகையா வைத்து மிச்சத்தைப்
பொலித் தறுபதிற் பெருக்கி
பாமருவுவா ரகத்திற் கரித்திடு மீவை
மருவு கலையாக வைத்து
வந்தசேடத்தை யறுபத்தாற் பெருக்கி யவண்
மன்னுமேற் றொகையி னுக்கு
மாண்புட னரித்து வருமீவையே விகலையா
வைக்க முன்கண்ட மதனை
வைத்ததிற் பாகைகலை விகலையை யொழித்தங்கு
வந்திட்ட பாக்கி மிச்சந்
தூமருவு பாகைகலை விகலையிற் பாகையைச்
சொல்லு மூந்நூற் றறுபதாற்
றுணிந்த ரித்திடுமீவை விகலையாக் கூட்டவுஞ்
சொன்னபடி கூட்டுமதனைத்
தொகுராசி பாகைகலை விகலையாச் செய்ததிற்
சூரன் மூலங்கூட்டிடிற்
சூரன்மத்திய மிதனை ரண்டாக்கியொன்றின்மந்
தோச்சங்க ளொந்து மறிகோல்
மீமருவ நீக்கிப் புஜாக்கொண்டு ஜாக்கண்டு
மேவுமத் தியத்தி ணைக்க
விளங்கி ரவிசுத்தபுட முணர்க வெண்டாளவுட
மேவித் ததும்பி யோங்கி
மிக்கபரிமளக ளபபாடீர குங்கும
விநோத தனமடமங் கையே
வித்வஜனர் மெச்சுமுரு கையபண்டிதனருளு
மிளிர்முருக சேகர மிதே.

(இ-பு) கண்டத்தை இரண்டு பிரிவாகவைத்து ஒரு பிரிவைப் பதினொன்றிற் பெருக்கி ஆரகம். 764-ல் அரித்த ஈவை பாகையாக வைத்து சேடத்தை யறுபதில் பெருக்கி ஆரகத்துக்கு அரித்த ஈவைக் கலையாக வைத்து சேடத்தை 60-ல் பெருக்கி ஆரகத்துக்கு

அரித்த யீவை விகலையாக வைக்கவும். பின்னொரு பிரிவாகிய கண்டத்தை பாகையாகவைத்து அதில் முன்வந்தபாகை, கலை, விகலையை களைந்து பாக்கி நின்ற சேடம், பாகை, கலை, விகலையில் பாகையை 360-ஆல் அரித்த யீவை விகலையில் கூட்டி இராசி, பாகை, கலை, விகலை யேறிட்டு இதில் சூரியன் மூலத்துருவம் கூட்டினால் சூரியன் மத்தியும். சூரியன் மத்திபத்தை யிரண்டு பிரிவாகவைத்து ஒரு பிரிவில் சூரியன் மந்தோச்சம் களைந்து பாக்கி நின்றதை மேடாதி துலாதி யறிந்து புஜாகோடி ஜாசமஸ்காரஞ் செய்துவந்த ஜாபலத்தை சூரிய மத்திபத்தில் மேடாதி களைந்து துலாதி கூட்ட சூரியன் சுத்தபுடம்; மேல்வருவன மகடூஉ முந்நிலை.

## சூரியகணித உதாரணம்

ஸ்ரீமுகவூ பங்குனியீ 28வ 12-நாழிகைக்கு

(1) கிரகசண்டம்.

36156 = 12 × 11

764) 392718—12 (520 = பாகை
3820
1571
1528
438 × 60

764) 26280 (34 — கலை
2292
3300
3006
304 × 60

764) 18240 (23 + 1 — 24 — விகலை
1528
2960
2292

அர்த்தாதிகம் 1

(2) பா. உ.

36156-12-0—
520-34-24
35635-37-36

300) 35635 (98 — விகலை
3240
3235
2880

30) 305 (11 — இரா
380
25 பாகை

(3)

37-26 +
98-2-வது நவ
39-14 +
மீதிஎரி—11-25-0-0
11-25-39-14

11-25-39-14 +

(4) 11-28-43-16-மூலத்துருவம்
23-24-22-30...
12-0-0-0-இராசிமண்டலம்
11-24-22-30—இரவிமத்யம்
2-18-14-0-மந்தோச்சம்
துலா-9-6-8-30-புஜாசெய்ய
2-23-51-30-கிரிகைசெய்ய

இராசி 2-க்கு ஜா 10
பாகை 18-க்கு ஜா 8
ஆகஜா 18
13-வது சூரியஜா 126
14-வது சூரியஜா 128
இன்பம 2

மீதிபாகை 5-கலை 51 ஐ
5×60
300+
51
சகம் )351×
இன்பம் 2
360)702(1
360
342 அர்த்தாதிக மானதால்
1 கூட்ட ஈவு 2

ஜாபலம் 126+
மீதிக்குஜாபலம் 2
60) 128 (2
120
8
ஜாபலம் பாகை 2-கலை 8
சூரியமத்திபம் 11-24-22-30
ஜாபலம் 2- 8தலா
சூரிசுத்தபுடம் 11-26 30-30
சூரியன்ரேவதி 4-ல்

---

## சந்திர கணிதம்

பெருமதிக ணித்திடிற் கண்டத்தை மூன்றிற
பெருக்கி யெண்பத்தி ரண்டிற்
பெட்புடன் வகுத்த சேடத்தினைக் கலைவரை
பெருக்கி யெண்பத்தி ரண்டிற்
பின்னரும் வருக்கவரு மீவையே விகலைவரை
பெரிது வைக்கவு மறுபடி
பேசுகண்டத்தை மூன்றால் வகுத்திடு மீவு
பேணுகலை சேடம் தனை
யிருமுப்பதாலே பெருக்கி மூன்றினில் வகுத்
திடுமீவு விகலை யாகும்
யேற்றகண் டத்தையிரு நூற்றறுபதால் வகுத்
திடுமீவு கலையங் கனே
யெய்து சேடத்தை யறுபத்தாற் பெருக்கி
யிருநூற் றறுபதால் வகுத்த
யீவுதான் விகலையா மாகயிம்முப் பிரிவு
ளெய்திய விராசி பாகை
மருவுகலை விகலைகளை யொன்றாய்த் திரட்டியதில்
மதியின் மூலங்கூட் டிடின்
மத்தியமாந் துங்கற்க ணித்திடகண் டத்தை
வருமோன் பதால் வகுக்க
வருமீவு பாகையிம் முறையாக விகலைசெய்
மறுதரங் கண்டத் தையே
வாருமறுபத் தாறினு லரித்தது கலையீவ்
வரைவிகலை வரைசெய்து முன்
பெருக்வைத் தவைகளிற் கூட்டிமா துங்கனின்
பேர்மூல மதுகூட் டிட
பேசுமத்தி யம்மதியை யொண்டாக்கி யொன்றி
லிப்பேர் துங்கநீக்கி மிச்சம்

பெற்பதனை யசகோற் புரிந்தவரு ஜாமறி
பிரித்துத் தராசு கூட்டப்
பெருகுமதி சுத்தபுடமாங் கணிதமுறை சொலப்
பெருமுருக சேகர மிதே.

(இ - ங்) கண்டத்தை மூணில் பெருக்கி எண்பத்திரண்டில் அரித்த சேடத்தை பன்னிரண்டில் பெருக்கி 82-ல் வகுத்தது ராசி. சேடத்தை முப்பதில் பெருக்கி 82-ல் வகுத்தது பாகை. சேடத்தை 60-ல் பெருக்கி 82-ல் வகுத்த யீவு கலே. சேடத்தை 60-ல் பெருக்கி 82-ல் வகுத்தது விகலேயாக வைக்கவும். பின்னும் ஒருதபா கண்டத்தை மூணிலரித்த யீவு கலே. சேடத்தை 60-பெருக்கி மூணிலரித்த யீவு விகலேயாக வைக்கவும். பின்னும் ஒருதபா கண்டத்தை 260-ல் அரித்த யீவு கலே. சேடத்தை 60-ல் பெருக்கி 260-ல் அரித்த யீவு விகலேயாக வைத்து ஆக இந்த மூன்று பிரிவு ராசி, பாகை, கலே, விகலேயை யொன்றாகக் கூட்டி சந்திரன் மூலத்துருவங் கூட்ட சந்திரன் மத்திபம் "துங்க கணிதம்" கண்டத்தை ஒன்பதிலரித்த யீவு பாகை. சேடத்தை 60-ல் பெருக்கி ஒன்பதில் வகுத்த யீவு கலே. சேடத்தை 60-ல் பெருக்கி ஒன்பதில் அரித்த யீவு விகலேயாக வைக்கவும். பின்னும் ஒருதபா கண்டத்தை 66-ல் அரித்த யீவு கலே. சேடத்தை 60-ல்பெருக்கி 66-ல் அரித்த யீவு விகலேயாக வைக்கவும். இந்த இரண்டு பிரிவு ராசி, பாகை, கலே, விகலேயை யொன்றாகக்கூட்டி துங்கன் மூலத் துருவங்கூட்ட "துங்கமத்திபம்" சந்திரன் மத்திபத்தை இரண்டு பிரிவாக வைத்து ஒன்றில் துங்கன் மத்திபத்தைக் களைந்துநின்ற சேடம் மேடாதி துலாதி அறிந்து புஜாகோடி ஜா சமஸ்காரஞ் செய்தவந்த ஜா பலத்தை சந்திரன் மத்திபத்தில் மேடாதி களைந்து துலாதிகூட்ட சந்திரன் சுத்தபுடமாம் (எ - று.)

## சந்திரகணித உதாரணம்

(1) நாள். 36156 — நா. 12 × கண்டம்
3
82) 108468 — 36 (1322
82
264
246
186
164
228
164
64 ×
12
768

(2)
63 × 12
60 | 432
7; 12 × 30
60 | 360
6

(1) 768+
(2) ஈவு 7
82) 775 (9—இராசி
738
37×30
1110+
(2) ஈவு 6
82) 1116 (13—பாகை
82
296
246
50×60
82) 3000 (36—கலை
246
540
492
48×60
82) 2880 (35—விகலை
246
420
410
10 நீக்கம்

கண்டம்
(2) 3 | 36156—12
60 | 12052 4 விகலை
30 | 200 52 கலை
இராசி 6 20 பாகை

கண்டம்
(3) 260)36156—12(139 கலை
260
1015
780
2356
2340
16×60
960+
12
260) 372 (3+1-4 விகலை
780
அர்த்தாதிகம்—1

(4) அங்ககணிதம்
கண்டம்
9 | 63156—12
பாகை 4017 3×60
180×
12
9 | 192
கலை 21 - 3×60
9 | 180
விகலை 20-0

(1) 9-13-36-35+
(2) 6-20-52- 4+
(3) 0- 2-19- 4 +
4- 6-47-43+
மூலம் 4- 6-19- 1
8-13-6 -44
சந்திரமத்திபம்

(5) 66) 36156 (547 கலை
330
315
264
516
462
54+60
3240 ×
12
66) 3252 (49 விகலை
264
612
594
நீக்கம் 18

(4) 4017 = 21 = 20 +
(5) 0-547-49
30 | 4026-29-9 விகலை
154-6-29-9

| | |
|---|---|
| இராசிமண்ட | 132 |
| அங்கன் | 2-6-29-9 |
| மூலத்துருவம் | 3-9-13-55 |
| ஷி மத்திபம் | 5-14-43-7 |
| சந்திரமத்தில் | 8-13-6-44 |
| தங்கமத்திபம் | 5-14-43-7 |
| மேடாதி | 2-28-23-31 ஓ |

இரா-2-க்கு ஜா-10
பாகை-24-க்கு ஜா-4
ஆ ஜா 14

| | |
|---|---|
| 14-வதி சந்திரஜா | 299 |
| 15-வதி சந்திரஜா | 301 |
| | 2-இன்பம் |

ஜாதீக்கிமிதி பாகை-4 கலை-23
4 × 60
240 +
23
சுகம் 263 ×
இன்பம் 2
360) 526 (1 +
360
அர்த்தாதிகமானதால் {166, 1 கூட்ட 2}

| | |
|---|---|
| 14-வதி ஜா | 299 + |
| மீதிக்குஜாபலம் | 2 |
| ஆ ஜாபலகலை | 301 |

60) 301 (5
300
1

| | |
|---|---|
| ஜாபலம்பாகை 5-கலை | 1 |
| மதிமத்திபம் | 8-13-6-44 |
| ஜாபலம் | 5-1-0 |
| சந்திரசுத்தபுடம் | 8-8-5-44 |
| மூலம் | 3-வ் மதி |

## செவ்வாய் கணிதம்

சேயைக்கணித்திடக்கண்டத்தையேகா
தெசத்திற் பெருக்காரகத்
திறமாகு மிருபதொன்று லரித்ததுபாகை
சேடத்தை யாறுபத்தாற்
தீரப்பெருக்கா கத்தரித்தேரிடு
திரும்பவுங் கண்டமேகா
தெசத்திற் பெருக்கி யெண்ணூற்று நாற்பத்தியேத்
தெனுமார கத்தரித்த
தாயகலையேரிட்டு முன்னதிற் கூட்டியிவ்வ்
ஆதிதுரு வத்தையுஞ் சேர்த்
ததுமத்ய முப்பிரிவாக்கி யொருபிரிவில்
ஆரல் மந்தோச்ச நீக்கி
யசகோலிந்தே புஜாக்கொண்டு கிரிகைசெய்
தண்டிவரு ஜாபலத்தை
யார்த்தித்துவக்ர மத்யத்தி லசகோலிற்
தார்சித்தல் மந்தவரையாம்

